Thanjavur Sarasvati Mahal Series No. 380.

A CATALOGUE

OF

SANSKRIT MANUSCRIPTS OF

# JAINISM

IN THE

SARASVATI MAHAL LIBRARY, THANJAVUR




THANJAVUR MAHARAJA SERFOJI'S
SARASVATI MAHAL LIBRARY, THANJAVUR.

1997

Price : Rs. 14-00

Thanjavur Sarasvati Mahal Series No. 380.

# A CATALOGUE
# OF
# SANSKRIT MANUSCRIPTS OF
# JAINISAM
# IN THE
# SARASVATI MAHAL LIBRARY, THANJAVUR

Edited By :

N. SRINIVASAN

Sanskrit Pandit, Sarasvati Mahal Library, Thanjavur.




THANJAVUR MAHARAJA SERFOJI'S
SARASVATI MAHAL LIBRARY, THANJAVUR.

1997 Price : Rs. 14-00



# Bibliographical Data


| | | |
|---|---|---|
| Title of the Book | : | A catalogue of Sanskrit Manuscripts of Jainisam in the Sarasvati Mahal Library, Thanjavur. |
| Editor | : | N. Srinivasan |
| Publisher | : | Director, Sarasvati Mahal Library. |
| Publication No. | : | 380 |
| Language | : | Sanskrit & English |
| Edition | : | I Edition |
| Date of Publication | : | December, 1997 |
| Paper used | : | 13.7 Kg. Seshasayee |
| Size of the Book | : | 25 × 19 cm. |
| Printing type used | : | 18 pt & 12 pt |
| Number of Pages | : | 58 |
| No. of copies | : | 250 |
| Price | : | Rs. 14–00 |
| Printer | : | Sarasvati Mahal Library Press |
| Binding | : | Card Board |
| Subject | : | Catalogue |

# வெளியீட்டாளர் முகவுரை

இந்திய வரலாற்றுக்குத் துணைநிற்கும் சமயங்களில் சமண சமயமும் ஒன்று. இது மிகத் தொன்மையான சமயமாகும். சமணர்களின் சமுதாயத் தொண்டும், கல்வித் தொண்டும் காலத்தால் நிலைத்து நிற்பவை. சமண சமயத்தின் முதல் தீர்த்தங்கரரான விருஷபதேவர் வாழ்ந்த காலத்தில் சமுதாயம் சீர்குலைந்திருந்தது. மக்களை நல்வழிப்படுத்த அவர்களுக்கு ''கைத்தொழிலும், தொழிற்கல்வியும், ஏட்டுக்கல்வியுமே சிறந்தவழி'' என்று தீர்மானித்தார். மக்களுக்கு சிற்பம், ஓவியம் போன்ற நுண்கலைகளைக் கற்றுக்கொடுத்து அவர்களது வளமான வாழ்வுக்கு வழிவகுத்தார். விருஷப தீர்த்தங்கரரால் தோற்றுவிக்கப்பட்ட சிற்பக்கலையின் இயக்கமே பின்னாளில் அழகு மிளிரும் சிற்பத் தொகுதிகளாகவும், குகைச் சிற்பங்களாகவும் உருவெடுக்க வழிவகுத்தன.

''மக்களுக்கு எழுத்தறிவை போதிக்க, மகாவீரரால் உருவாக்கப் பெற்றதே ப்ராம்மி என்ற எழுத்தின் வரிவடிவாகும்''. சமண சமய குருமார்களும், புலவர்களும் இந்தியாவின் தொன்மை மொழிகளான வடமொழி, தமிழ் ஆகியவற்றுக்கு இவர்கள் ஆற்றிய தொண்டு என்றும் நினைக்கப் படுபவை. தமிழக மன்னர்களான பல்லவர், சேர, சோழ, பாண்டியர்கள் சமண சமய வளர்ச்சிக்குத் துணைநின்றனர் என்பது வரலாறு கூறும் உண்மை.

இத்தகு சிறப்புமிக்க சமண சமயத் தொடர்புடைய வடமொழிச் சுவடிகள் தஞ்சை சரஸ்வதி மகால் நூலகத்தில் அதிக அளவிலுள்ளன. இதில் 314 தலைப்புள்ள நூல்கள் இடம்பெற்றுள்ளன. இச்சுவடிகளிலுள்ள நூல்களின் அகர வரிசையுடன் கூடிய ''விவரப்பட்டியல்'' (Catalogue) தற்போது முதன்முதலாக வெளிவருகிறது. இந்த விவரப்பட்டியலின் பதிப்பாசிரியர் சரசுவதி மகால் நூலகத்தின் வடமொழிப் பண்டிதர் திரு. N. சீனிவாசன் அவர்கள். சமண சமயம் பற்றியும், தமிழகத்தில் அவர்களாற்றிய தொண்டுகள் பற்றியும், அவர்களாற்றிய வடமொழித் தொண்டு பற்றியும் தமிழில் அழகிய ஆய்வு முன்னுரையும் எழுதியுள்ளார். வித்வான் N. சீனிவாசன் அவர்களுக்கு எனது பாராட்டுக்கள்.

இந்நூல் வெளிவர நிதியுதவிபுரிந்த நடுவண் அரசுக்கு எனது நன்றியை உரித்தாக்குகிறேன்-

இந்த விவரப்பட்டியல் நன்முறையில் வெளிவர ஆவன செய்திருக்கும் இந்நூலக நிருவாக அலுவலர் திரு. சி. பாலசுப்ரமணியன் அவர்களுக்கும், நூலக வெளியீடு மேலாளர் திரு: அ. பஞ்சநாதன் அவர்களுக்கும், நூலகத்தின் அச்சகப் பணியாளர்களுக்கும் எனது பாராட்டுக்கள்.

சமண சமயத்துறையைச் சார்ந்தவர்களுக்கும், ஆராய்ச்சியாளர்களுக்கும், மாணவர்களுக்கும் இந்த நூல் விவரப்பட்டியல் என்றும் பயன்படும் என்பது உறுதி.

**து. நா. இராமநாதன்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்
சரசுவதி மகால் நூலகம்.

**தஞ்சாவூர்**
**19—12—1997.**



# முன்னுரை

இந்தியத் துணைக் கண்டத்தில் தோன்றிய மதங்கள் பல. இவற்றுள் மிகத் தொன்மையான மதங்களில் ஜைன மதமுமொன்று. இம்மதத்தை சமணம், ஜைனம், அர்ஹமதம், நிகண்ட மதம், என்ற பல்வேறு பெயர்களால் அழைப்பார்கள். இம்மதத்திற்கு நிகண்ட (निग्गंठ) என்று பாலி மொழியில் பெயர். இச்சொல்லுக்கு 'பவபந்தங்களை அறுப்பது' என்று பொருள். விருப்பு, வெறுப்பு ஆகியவற்றைத் துறந்த துறவிகளையே 'அர்ஹத்' என்ற சொல் உணர்த்துகிறது.* இத்தன்மை வாய்ந்த துறவிகள் இம்மதத்தை மக்களிடம் பிரசாரம் செய்து பரப்பியதால் இம்மதத்திற்கு 'அர்ஹ மதம்' என்ற பெயருண்டாயிற்று.

சமண மதம் இந்தியா முழுதுமே பரவி இருந்தது. இம் மதத்தைச் சார்ந்த துறவிகள், இலக்கியம், கலை, கலாச்சாரங்களைப் பேணிக்காத்தவர்கள் எனில் மிகையில்லை. ஆயினும், இந்நாளில் சமண மதத்தைப் பின்பற்றுகின்றவர்கள் மிகக் குறைந்த அளவிலேயே வாழ்கின்றனர். என்றாலும், இம் மதத்தைச் சார்ந்த இலக்கியவாதிகள், சாஸ்திர அறிஞர்கள், இயற்றிய நூல்கள் இன்றும் காணக்கிடைக்கின்றன. இம்மதத்தினர் வழிபாடு புரிந்த-புரிகின்ற கோவில்களும், சமணத் துறவிகள் வாழ்ந்த பாழிகளும் இந்தியாவின் பல பகுதிகளில் காணமுடிகின்றன.

இத்தகைய தொன்மை வாய்ந்த சமண சமயத் தொடர்புடைய காகிதச் சுவடிகளும், ஓலைச் சுவடிகளும் சரஸ்வதி மஹால் நூலகத்தில் பேணிப்பாதுகாக்கப்படுகின்றன. இதனால் சமண சமயம் பற்றியும், இந்நூலகத்தில் காணப்படும் சுவடிகளைப் பற்றியும் அறிமுக விளக்கமே இக்கட்டுரையின் நோக்கம்.

**தீர்த்தங்கரர் :**

தீர்த்தங்கரர் என்பதிலுள்ள தீர்த்த என்னும் சொல் 'தானும் புனிதமாக இருந்து, தன்னைச் சார்ந்தவர்களையும் புனிதம் பெறச் செய்கின்றவர்களை 'தீர்த்த' என்ற சொல் குறிக்கும். இதனால் ஜைன சமய குருமார்கள்

---

* सर्वज्ञो जितरागादिदोपत्रैलोक्यपूजितः ।
यथास्थितार्थवादी च देवोऽर्हन् परमेश्वरः ॥

தீர்த்தங்கரர் என்ற பெயரால் அழைக்கப்படுகின்றனர். இத்தகைய தீர்த்தங்கரர்கள் தெய்வத்தன்மை பொருந்தியவர்களாயும், மெய்யுணர்வு வாய்ந்தவராயும், உலகப் பற்றை அறவே ஒழித்தவராயும், ஐம்புலன்களை அடக்கியாளும் ஆற்றல் மிக்கவராயும், அஞ்ஞான இருளைப் போக்கி ஆன்மீக ஒளியை உருவாக்குகின்றவராயும், பிற உயிரினங்கள் படும் துன்பங்கண்டு இரங்கி, அத்துன்பங்களைப் போக்கும் தயாள குணம் கொண்டவராயும், அஹிம்ஸையே உருக்கொண்டு விளங்குபவராயும், திகழ்ந்தவர்கள் தீர்த்தங்கரர்கள்.

இத்தகைய தீர்த்தங்கரர்களால் தோற்றுவிக்கப்பட்டதே சமணமதம். இம் மதத்தை மக்களிடையே பிரசாரம் செய்து இந்தியா முழுதும் பரப்பியவர்களே தீர்த்தங்கரர்கள். இவர்கள் 24 பேர்கள். அவர்கள் வருமாறு:

1. விருஷப தீர்த்தங்கரர், 2. அஜிநாதர், 3. சாம்பவநாதர், 4. அபிநந்தனர், 5. சுமதிநாதர், 6. பதுமநாபர், 7. சுபார்சுவநாதர், 8. சந்திரப்பிரபர், 9. புஷ்பதந்தர் (ஸுவிதிநாதர்). 10. சீதளநாதர், (ஸித்திபட்டாரகர்) 11. ஸ்ரீயாம்சநாதர், 12. வஸுபூஜ்யர், 13. விமலநாதர், 14. அநந்தநாதர் (அநந்தஜித பட்டாரகர்) 15. தர்மநாதர், 16. சாந்திநாதர், 17. குந்துநாதர் (குந்து பட்டாரகர்) 18. அரநாதர், 19. மல்லிகாநாதர், 20. முனிஸுவர்த்தர், 21. நமிநாதர் (நமிபட்டாரகர்) (22) நேமிநாதர் (அரிஷ்ட நேமி) 23. பார்ஸ்வ நாதர், 24. வர்த்தமான மஹாவிரர் ஆகியோர்.

ஜைன மதத்தின் கடைசி தீர்த்தங்கரராக விளங்கிய வர்த்தமானர், ராக-த்வேஷங்களைக் களைந்த காரணத்தால் 'ஜினர்' என்று மக்கள் அழைத்தனர். ஜினரால் பிரசாரம் செய்யப்பட்ட காரணத்தால் இம் மதத்தை 'ஜைன மதம்' என்றே அழைக்கலாயினர்.

ஜைன மதத்தின் முதல் தீர்த்தங்கரரான விருஷப தேவர் பிரசாரம் செய்த கொள்கைகளையே, விருஷப தேவருக்குப் பின்வந்த தீர்த்தங்கரர்களும் பின்பற்றியதுடன் அவற்றை பிரசாரம் செய்யலானார்கள். இருபத்துமூன்றாவது தீர்த்தங்கரரான பார்ஸ்வநாதர், விருஷப தீர்த்தங்கரரின் கொள்கைகளில் சில மாற்றங்களைச் செய்து பிரசாரம் செய்தார். பார்ஸ்வநாதருக்குப்பின் வந்த வர்த்தமான மஹாவிரர், பார்ஸ்வநாதர் திருத்தியமைத்த கொள்கைகளை மேலும் சீர்திருத்தம் செய்து பிரசாரம் செய்தார்.

இதனால், பார்ஸ்வநாதரே சமண சமயத்தை உருவாக்கினாரென்றும், இதில் சீர்திருத்தம் செய்தவர் மஹாவிரர் என்றும் ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். ஏனெனில் பார்ஸ்வநாதருக்கு முன்பிருந்த தீர்த்தங்கரர்களுடைய காலங்களை ஆராய்ந்தறிய முடியாமையாலும், பார்ஸ்வநாதருக்கு முன்

வாழ்ந்த இருபத்திரண்டு தீர்த்தங்கரர்களும் இயற்கைக்கு மாறான உருவத்துடன், பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் உயிர்வாழ்ந்தனர் என்றும் கூறப்படுகிறது. ஆகவே, 2-22 தீர்த்தங்கரர்களும் கற்பனையே என்று கூறுகின்றனர்.

ஆனால், வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் கருதுவது போல 2-22 தீர்த்தங்கரர்களையும் கற்பனையாகக் கருதி ஒதுக்க முடியாது என்றும். பழங்காலத்தில் வாழ்ந்த பெரியோர்களுக்குப் பிற்காலத்தில் தோன்றிய அடியார்கள் இயற்கைக்கு அப்பாற்பட்ட அமானுஷ்ய இயல்புகளைப் பொருத்திக் கூறுவது நம் நாட்டவர் வழக்கம் என்றும், இவர்கள் வாழ்ந்த காலங்களை அறிய முடியாமையால் இவர்கள் கற்பனையாகக் கற்பிக்கப்பட்டவர்கள் என்றும் கூற இயலாது" என்றும் டாக்டர் தா. எ. ஞானமூர்த்தி அவர்கள் 'சமணம்' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளனர்.

23-வது தீர்த்தங்கரராகிய பார்ஸ்வநாதர் கி. மு. 8 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்றும், 24-வது தீர்த்தங்கரராகிய வர்த்தமான மஹாவிரர் கி. மு. 6 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரென்றும் அறிய முடிகிறது.

விருஷப தேவர் :

ஜைன சமயத்தின் முதலாவது தீர்த்தங்கரரான விருஷப தேவர், நாபிராஜர் - மருதேவி தம்பதிகளுக்குத் தோன்றினார். இவர் வாழ்ந்த காலத்தில் சமுதாயம் சீர்குலைந்து இருந்ததால், எங்கும் துன்பமும், சோகமும், அறியாமையுமாகக் காணப்பட்டது. இதனால் வருந்திய விருஷப தேவர், மக்களுக்கு நன்னெறி புகட்டி, சிற்பம், ஓவியம், போன்ற கலைகளையும், கல்வியையும் புகட்டினார். மொழிக்குரிய வரிவடிவை (எழுத்தை) விருஷப தேவரே ஏற்படுத்தியவர் என்றும், இவரால் தோற்றுவிக்கப்பட்ட வரிவடிவமே 'ப்ராம்மி லிபி' என்றும் வரலாற்று ஆய்வாளர் N. N. பாசு அவர்கள் விசுவகோசம் என்ற நூலில் கூறியுள்ளார். இதனையே வலியுறுத்துமாப்போல சூடாமணி நிகண்டு, ஆதிநாதர் பிள்ளைத்தமிழ் போன்ற நூல்களில் கீழ்க்காணும் வரிகளும் காணப்படுகின்றன.

"வரைவொடு தொழிலே வித்தை
வாணிக முழவே சிற்பம்" — சூடாமணி நிகண்டு

"இசையினா லெண்ணெழுத் இயம்பு வித்தாயு நீ"
— ஆதிநாதர் பிள்ளைத்தமிழ்.

விருஷப தேவர் இல்லறத்தையும் துறவறத்தையும் சமமாகவே கருதியவர். மனித வாழ்விற்கு இவ்விரண்டுமே இன்றியமையாதவை. இல்லறம், மக்கள் உள்ளத்தைப் பண்படுத்தவல்லது என்றும், துறவறம் ஆன்மீக நெறியில் சென்று வீடுபேற்றை நல்கவல்லதென்றும் கூறினார். இவர்

போதித்த நெறிகளாவன : 1. கொல்லாமை, 2. பொய்யாமை, 3. கள்ளுண்ணாமை. 4. பிறன்மனை நயவாமை 5. மிகு பொருள் வெஃகாமை ஆகிய ஒழுக்க நெறிகளை போதித்தார். இவருக்குப் பின்வந்த 22 தீர்த்தங்கரர் வரையுள்ளவர்களுக்கான வரலாற்றுச்செய்திகள் அகப்படவில்லை. இருப்பினும் 23வது தீர்த்தங்கரரான பார்சுநாதரைப் பற்றிய செய்திகளே அகப்படுகின்றன.

பார்சுவநாதர் :

பார்சுவநாதர் இந்தியா முழுவதும் யாத்திரை செய்து நான்கு உண்மைகளை போதித்தார். 1. பிற உயிர்களுக்கு இன்னல் புரியாமை, 2. உண்மையே பேசுதல், 3. களவின்மை, 4. பொருட்பற்றில்லாமை ஆகியன. இத்துடன் "கர்மயோக மார்க்கமே முக்திக்குச் சிறந்த வழி" என்றுகூறி முதல் தீர்த்தங்கரரான விருஷபதேவரின் கொள்கையிலிருந்து சில மாற்றங்களைச் செய்தார். பார்ஸ்வநாத தீர்த்தங்கரர் கி. மு. 777 ஆம் ஆண்டில் 'சம்மேதம்' என்ற பெயருடைய குன்றையடைந்து வீடு பேற்றைப் பெற்றார்.

மஹாவீரர் :

பார்ஸ்வநாத தீர்த்தங்கரர் வீடு பெற்ற பின்னர் 250 ஆண்டுகளுக்குப் பின் கி. மு. 559 ஆம் ஆண்டில் மன்னன் சித்தார்தன் – திரிசலா என்ற தம்பதிகளுக்கு இரண்டாவது மகனாகப் பிறந்தார் மஹாவீரர். இளமையிலேயே கல்வி கேள்விகளில் வல்லவராகத் திகழ்ந்தார். ஆன்மீகத்தில் மிகுந்த நாட்டங்கொண்டிருந்தார். அவர் வாழ்ந்த காலத்தில் தெய்வத்தின் பெயரால் நரபலி, மிருக பலிகளைக் கொடுப்பதையும், பாவச் செயல்களில் மக்களீடுபடுவதையும் கண்டு மனம் வருந்தினார். பெற்றோரின் வற்புறுத்தலுக்காகக் கட்டுப்பட்டு திருமணம் செய்துகொண்டார். தந்தைக்குப் பின் தங்களது அரசிற்கு முடிசூட்டிக்கொள்ளுமாறு மஹாவீரரின் தமையனார் கேட்டுக்கொண்டார். அரசு முடியை ஏற்றுக்கொள்ள மறுத்த மஹாவீரர், ஆன்மீகத்திற்கு 'அரசுமுடி' தடையாக இருக்கும் என்று கூறியதுடன் தனது தலைமுடியையும், ஆடை-அணிகலன்களையும் துறந்து துறவியானார்.

மஹாவீரர், பார்ஸ்வநாதரின் கொள்கைகளையே ஆரம்பத்தில் தழுவினாலும், மஹாவீரருக்குத் திருப்தி ஏற்படவில்லை. இதனால் சில கடுமையான சமயக் கொள்கைகளை ஆதரித்தார். அவற்றிலொன்றுதான் "துறவிகள் அறவே ஆசையற்றவராக இருத்தல் வேண்டும்" என்பது. ஆனால், பார்ச்வநாதரின் கொள்கைகளில் வெள்ளையாடை யணிதலைக் குற்றமாகக் கொள்ளவில்லை இதனால் சமண சமயத்தில் இருவேறு நெறிகள் தோன்றின. இந்த இரு நெறிகளையும் கைக்கொண்டு மக்கள் ஒழுகியதால் இரண்டு பிரிவாயிற்று. வெள்ளையாடை அணிந்த துறவிகளை "ஸ்வேதாம்பர

சமணர்'' என்றும், திசைகளையே ஆடையாகக்கொண்ட (நிர்வாணமாக — ஆடையின்றி) சமணத் துறவிகளை ''திகம்பர சமணர்'' என்றும் இருவிதப் பிரிவுகள் ஏற்பட்டன.

சமணர்களில் இருவித பிரிவினர்களாக இருந்தபோதிலும் உருவ வழிபாட்டை ஏற்றுக்கொண்டிருந்தனர். சமணர்களின் ஆலயங்களில் மூலவர், உத்ஸவர் மற்றும் ஆலயங்களிலுள்ள பரிவார தேவதைகள் ஆகிய அனைத்துமுண்டு. ஸ்வேதாம்பர சமணர்களின் ஆலயங்களில் அங்குள்ள சிலா விக்ரகங்களுக்கு ''வெள்ளை ஆடை'' அணிவிக்கப்பெற்றிருக்கும். திகம்பர சமணர்களின் ஆலய விக்ரஹங்களுக்கு ஆடை இருக்காது. இவையே ஆலயங்களிலுள்ள வேறுபாடுகள்.

ஆயின், சமண சமயத்தினருக்கு உருவ வழிபாட்டில் நம்பிக்கையிருந்த போதிலும், உருவ வழிபாட்டையே ஏற்காத சமணத் துறவிகளுமுண்டு. இவர்களை ''ஸ்தானவாசி சமணர்'' என்று கூறுவர். ஸ்தானவாசி சமணர்களின் ஆலயங்களில் சிலா விக்ரஹங்களுக்குப் பதில் சமண சமய ஆகம நூல்களையே தீர்த்தங்கரர்களாகவும், அருகக்கடவுளாகவும் வழிபாடு புரிகின்றனர். இத்தகைய ஆலயங்களில் சமண சமயத் தொடர்புடைய நூல்களுக்கே வழிபாடுகள் நடைபெறுகின்றன.

ஆக, சமண சமயத்தில் மூன்று உட்பிரிவுகள் உண்டு. இம்மூன்று நெறிமுறைகளையும் கடைபிடித்துவந்த ஜைனத் துறவிகள் மலைகளிலும், குன்றுகளிலுமே வாழ்ந்துள்ளனர். இத்துறவிகள் வாழ்ந்த இடங்களை ''பாழிகள்'' என்றும், ''பள்ளிகள்'' என்றும் அழைத்தனர். இத்துறவிகள் வாழ்ந்த பாழிகளில் சமண சமயம் போற்றும் தீர்த்தங்கரர்களின் உருவச் சிலைகளும், ''ஸல்லேகனம்'' என்னும், கற்பாறைகளில் அமைக்கப்பட்ட முனிவர்களின் படுக்கைகளும், அதில் கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன.

'ஸல்லேகனம்' என்றால், ஜைன சமயத் துறவிகள் இவ்வுடலை விட்டு வீடுபேற்றையடைய நிச்சயம் செய்து விட்டார் என்றால் உயிர் உடலை விட்டு நீங்கும் வரையில் உண்ணாநோன்பு இருந்து உடலை வருத்திக் கொள்வர். உணவின்மையால் உடல் சோர்வுற்றுத் தளர்ந்து போகும். அப்போது படுத்துக்கொள்ள வசதியாக இருக்கும் பொருட்டு கருங்கல்லால் செய்யப்பட்ட படுக்கையில் படுத்துக்கொண்டே இவ்வுடலைத் துறந்துவிடுவர். இத்தகைய படுக்கைக்கு 'ஸல்லேகனம்' என்று பெயர். இதில் உயிர் துறந்த அத்துறவியின் பெயர் கல்லில் எழுதப்பட்டு அப்படுக்கை பூஜிக்கும் நிலையை அடையும்.

**சமண சமயக் கொள்கை :**

"ஆத்மா" என்பது பல. அந்த ஆத்மாக்கள் ஒவ்வொன்றும் ஆற்றல் மிக்கவை. எல்லையற்ற அறிவையுடையவை. அந்த ஆத்மாக்கள் ஒவ்வொன்றும் எந்த உடலில் உறைகின்றதோ அந்தந்த உடலுக்கேற்றபடி அது சிறிய தாகவோ, அல்லது பெரியதாகவோ தன்னை உருவாக்கிக்கொள்கிறது. ஒவ்வொருவனுடைய ஆத்மாவும் அவனவன் நியதிக்கேற்ற வண்ணம், அந்த ஆத்மாவே உருவாக்கிக் கொள்கிறது, இதனால் இன்ப—துன்பங்களுக்கு அவனவனே காரணமாகிறான். ஆத்மா வீடுபேற்றையடைந்த பிறகு பிறவியெடுப்பதில்லை என்பவை சமணரின் முக்கிய கொள்கைகளாகும்.

**சமண சமயத்தின் முக்கியமான தொண்டுகள் :**

அன்னதானம், அபயதானம் (அடைக்கலம் கொடுத்தல்), ஔடத தானம் (வைத்தியம்), சாஸ்திர தானம் (கல்வி), என்பவை சமணர்களால் பொதுத் தொண்டாகக் கடைபிடித்துவந்த நெறிகள். இந்த நெறிகள் மஹாவீரர் காலந்தொட்டங்கியே வலியுறுத்தப் பெற்றுள்ளன. பின்னர் இது வளர்ச்சிபெற்று உயிர்களுக்குச் செய்யும் தொண்டாக ஆற்றிவந்தவர் சமணர்கள். இத்தகைய பொதுத்தொண்டுகளால் மக்களிடையே பிரசார மானதுடன், சமணம் மக்களிடையே வரலாயிற்று. சமண சமயத்தினரின் கல்விப்பணி வரலாற்றில் அழியாத நிலையடைந்தது எனில் மிகையில்லை.

**சமணரின் கல்விப் பணி :**

ஜைன மதத்தைத் தோற்றுவித்த 'விருஷபதேவர்' வாழ்ந்த காலத்தில் சமுதாயம் சீர்குலைந்து இருந்ததால் எங்கும் துன்பமும், சோம்பலும், அறியாமையும் தாண்டவமாடின. "சமுதாயத்தில் காணப்படும் துன்பங்கள் நீங்கவேண்டுமாயின் மக்களின் அறியாமையை அகற்ற வேண்டும். ஆதலால் மக்களுக்குக் கல்வியறிவை போதிக்கவேண்டும்" என்று எண்ணினார் விருஷபதேவர்.

இதன் காரணமாக, சிற்பம், ஓவியம் போன்ற கலைகளையும். சாஸ்திரக் கல்வியையும் கற்றுக்கொடுத்தார். கல்வி கற்கவேண்டுமாயின் எழுத்தறிவு மிகவும் அவசியம் என்பதால் 'ப்ராம்மீ' என்ற எழுத்தை முதன் முதலில் கண்டுபிடித்து அதனை எழுத மக்களுக்குப் பயிற்சியும் கொடுத்தார் என்று ஆராய்ச்சியாளர் N. N பாசு அவர்கள் 'இந்திய விசுவகோசம்' என்னும் நூலில் கூறியுள்ளார். 'ப்ராம்மீ' எழுத்தே தற்காலத்தின் மொழியியலில் காணப்படும் மிகத் தொன்மையான எழுத்து என்பது அறிஞர்களின் கருத்து. மக்களுக்குக் கல்வியறிவைப் புகட்டுவதுடன், ஆன்மிகத் தொடர்புடைய மதக் கல்வியையும் புகட்டினர். இவ்வழக்கம் சமணர்களின் காலந் தொடங்கியே

இன்றுவரை (இம்மரபே) தொடர்ந்து வருகிறது. சமணர்களுக்குப் பின்வந்த பிற சமயவாதிகளும் இந்த நெறியையே பின்பற்றி வந்துள்ளனர் என்பதும் சிந்திக்கத் தக்கது.

விருஷப தேவருக்குப் பின்வந்த தீர்த்தங்கரர்களும், சமணத் துறவிகளும், கல்வி பயிலும் மாணவர்களுக்கு உணவு, உறையுள் ஆகியவற்றையும் அளித்து அங்கேயே கல்விக் கூடத்தையும் அமைத்து போதித்து வந்தனர். (இன்றைய நாட்களில் கல்லூரிகளில் மாணவர்கள் தங்கிப் படிக்கும் விடுதி வசதியைப் போல) ஆரம்ப காலத்தில் சமணர்கள் பெரும்பாலும் மலைகளிலும், குன்றுகளிலும் அங்குள்ள குகைகளிலுமே வாழ்ந்துவந்தனர். பிற்காலத்தில் மன்னர்களால் நிவந்தமாக அளிக்கப்பட்ட கிராமங்களில் கல்விப் பணியைச் செய்துவந்தனர்.

உதாரணமாக, தமிழகத்தில் கி. பி. 9 ஆம் நூற்றாண்டில் கன்யாகுமரி மாவட்டத்தில் சித்தரால் என்ற இடத்திலுள்ள திருச்சாரணாத்து மலையில் மிகச்சிறந்த சமணப் பல்கலைக்கழகம் இருந்ததாகவும், இதில் ஆசார்யர்களாகப் பணியாற்றியவர்கள் சமண சமயக் கோட்பாடுகளைப் போதித்தது மட்டுமின்றி எண்ணற்ற குருமார்களுக்கும் (துறவிகள்). பெண் துறவிகளுக்கும் சமயப் பயிற்சியளித்து அவர்களை நாடெங்கும் அனுப்பி சமண சமயத்தைப் பரவச் செய்தனர் என்றும் குடவாயில் பாலசுப்ரமணியம் "குடவாயிற் கோட்டம்" என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

இதேபோலவே 8 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சமணத் துறவியும், சம்ஸ்கிருத ஜைன சமய நூலாசிரியருமான அகலங்கபட்டர் என்பவர் கர்நாடக மாநிலத்திலுள்ள "ச்ரவண பெளெகொளா"வில் வாழ்ந்தவர். இவர் வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள "பெண்ணாகடம்" என்ற ஊரில் புகழுடன் விளங்கிய புத்தமதப் பள்ளியில் படிப்பதற்காகப் பெண்ணாகடம் வந்து கல்வி பயின்றார். பின்னர் வட ஆர்க்காட்டிலேயே தங்கி சமணத்தைப் பரப்பியுள்ளார்.

ஆகவே மாணவர்கள் தங்கிப் படிப்பதற்கான அனைத்து வசதிகளுடன் கூடிய பள்ளிகள் அந்நாளிலேயே இருந்தன. சமணர்களின் பொதுத் தொண்டை கருத்தில் கொண்டிருந்த மன்னர்கள் நிலங்களையும், கிராமங்களையும் கொடையாகக் கொடுத்துள்ளனர். இவற்றுக்கு பள்ளிவாரியம், பள்ளிச் சந்தங்கள், பள்ளி விளாகம் என்ற பெயர்களில் கொடைகள் கொடுத்த தற்கான கல்வெட்டுச் சான்றுகளும் காணப்படுகின்றன.

**சமணர்களின் சம்ஸ்க்ருத நூல்கள் :**

சமணர்கள் அவரவர்கள் வாழ்ந்த பகுதிகளில் மக்கள் பேசிவந்த மொழிகளிலேயே கல்விப்பணியை ஆற்றிவந்தனர். இதனால் பல நூல்களை வட்டார மொழிகளிலேயே இயற்றி வந்துள்ளனர். குறிப்பாக மஹாவீரர் வாழ்ந்த காலத்தில் பொது மக்களுக்கே ஜைன மதத்தை முதலில் பரப்பினார். இதனால் மக்கள் அறிந்த மொழியாகிய அர்த்தமாகதி (அர்த்மாகதி ப்ராகிருத மொழி) யிலேயே மஹாவீரரும். அவருடைய சீடர்களும் பிரசாரம் செய்தனர். இதன் காரணமாக ஜைன மதத்தின் முதல் நூல்கள் யாவும் அர்த்மாகதி ப்ராகிருத மொழியிலேயே இயற்றப் பெற்றுள்ளன. கி. பி.க்குப் பின்னர் இயற்றப் பெற்ற நூல்கள் யாவும் ஸம்ஸ்கிருத மொழியிலேயே இயற்றப் பெற்றன. இவ்வாறு ஸம்ஸ்கிருத மொழியில் இயற்றப் பெற்ற நூல்களை ஆரம்ப கால நூல்களாகவும், இடைக்கால நூல்களாகவும் பிரிக்க முடியும். ஆரம்ப கால நூல்களில் முதன் முதல் எழுந்த ஸம்ஸ்கிருத நூல் கி. பி. முதலாம் நூற்றாண்டில் 'உமாஸ்வாதி' என்பவரால் இயற்றப் பெற்ற 'தத்வார்த்த சூத்திரம்' என்பதாகும்.

ஜைன சமயத்தின் தொடக்க கால நூல்களை இயற்றிப் புகழ்பெற்ற பண்டிதர்களில் உமாஸ்வாதி, குந்தகுந்தாச்சாரியார், ஸமந்தபத்ரர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களுடைய ஸம்ஸ்கிருத நூல்களே ஜைன சமயத்திற்கு அஸ்திவார நூல்களாகும்.

உமாஸ்வாதி என்னும் புலவர் உமாஸ்வாமி, கிருத்தபிச்சாரியார் என்ற வேறு பெயர்களாலும் அழைக்கப்படுகிறார். "இவரியற்றிய தத்வார்த்த சூத்திரம்" என்ற நூல் "தத்வார்த்தாதிகமா" என்ற பெயராலும் அழைக்கப் படுகிறது. இந்த நூலுக்குப் பல புலவர்கள் விரிவுரை, குறிப்புரை, விருத்தியுரை போன்ற பல உரை நூல்களை இயற்றியுள்ளனர் என்று குறிப்பிடுகின்றார் ஸம்ஸ்கிருத இலக்கிய ஆராய்ச்சியாளர் திரு தனிஜேந்த்ரநாத் ஜா அவர்கள்.

இங்ஙனம் தோன்றிய பாஷ்யங்களில் (விரிவுரைகளில்) "ஸமந்தபத்ரர்" இயற்றிய "கந்தஹஸ்தி பாஷ்யமே" முதல் பாஷ்ய நூலாகும். இந்த நூல் முற்றும் கிடைக்கவில்லை. ஆயினும் சில பகுதி—ஸ்லோகங்களே இப்போது கிடைக்கின்றன. "தேவநந்தி" என்னும் "பூஜ்யபாதர்" எழுதிய "ஸர்வார்த்த ஸித்தி" என்பது மற்றொரு பாஷ்யமாகும். இதே சூத்திரங்களுக்கு 8 ஆம் நூற்றாண்டில் கர்நாடக மாநிலத்திலுள்ள "ஸ்ரவணபெளஹொளா என்னும் இடத்தில் வாழ்ந்த சமண சமயப் புலவர் அகளங்கபட்டர் என்பவர் "ராஜ வார்த்திகம்" என்ற பெயரில குறிப்புரை இயற்றியுள்ளார். வித்யாநாதர் என்ற சமணப் புலவர் தத்வார்த்தாதிகமா என்ற நூலுக்கு "ஸ்லோக வார்த்திகம்" என்ற குறிப்புரையை இயற்றியுள்ளார். இந்த நூல்கள் அனைத்துமே ஜைன மதத்தின் தத்துவங்களையும், ஜைன தர்மங்களையும் ஆராயும் நூல்களாகும்.

## புராணங்கள்

ஜைனர்கள் ஸம்ஸ்க்ருத மொழியில் பல புராணங்களையும், பல ஸ்தோத்திர நூல்களையும் இயற்றியுள்ளனர். புராண நூல்களில் தலையாயது மஹாபுராணம். இது இரண்டு பிரிவுகளைக் கொண்டது. ஆதிபுராணம் என்றும், உத்தர புராணம் என்றும் அழைக்கப்படுகிறது. ஆதிபுராணத்தை 9 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஜினஸேனரும், உத்தர புராணத்தை 10ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த குணபத்ரரும் இயற்றியுள்ளனர். இவ்விரண்டு நூல்களிலும் ஜைன சமயாச்சாரியார்களான அறுபத்துமூன்று மஹாபுருஷர்களைப் பற்றிக் கூறுகிறது. இந்த மஹாபுருஷர்களைப் பற்றிய வேறு புராணங்களுமுண்டு. தீர்த்தங்கரர்களைப் பற்றிக் கூறும் சிறிய சிறிய புராணங்களுமுண்டு.

இவற்றைத் தவிர கி. பி. 8 ஆம் நூற்றாண்டில் தோன்றியது பத்ம புராணம். இதில் ஸ்ரீராமனுடைய சரித்திரத்தைக் காணலாம். இதனை ஜைன ராமாயணம் என்ற பெயரில் அழைப்பதுமுண்டு. வால்மீகி ராமாயணக் கதைகளுக்கும் இதில் கூறப்பட்டுள்ள கதைகளுக்கும் வேறுபாடுகள் பலவுண்டு. ராமன் கதையைப் போலவே கண்ணனுடைய சரித்திரத்தைக் கூறும் 'ஹரி வம்சம்' போன்ற புராண நூல்களும் ஜைனர்களின் நூல் வரிசைகளில் காணப் படுகின்றன.

## காவியங்கள் :

மல்லிசேனர் இயற்றியது நாககுமாரகாவியம் என்ற நூல். 11 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நாககுமாரனைப் பற்றி காவியமாகப் படைக்கப் பட்டுள்ளது. இந்த நாககுமாரன் மகதநாட்டு மன்னராகத் திகழ்ந்தவர். இந்த நூல் "ஸ்ருதபஞ்சமிகதை" என்ற பெயராலும் அழைக்கப்படுகிறது. இக்கதையை அடிப்படையாகக் கொண்டு தமிழில் எழுந்த சிறுகாப்பியமே நாககுமார காவியமாகும்.

மற்றும், தன்ய குமார சரித்திரம், பத்ரபாஹு சரித்திரம், க்ஷத்ர சூடாமணி போன்ற காவியங்களும் ஜைனர்களால் படைக்கப்பட்டுள்ளன. ஒரு சில காவியங்களுக்குத் தமிழில் உரை நூல்களும் (சுவடிகளாக) தஞ்சை சரஸ்வதிமஹால் நூலகத்திலுள்ளன.

ஸ்தோத்திரங்கள் ;

ஜைன மதத்தின் ஆசாரிய புருஷர்களான தீர்த்தங்கரர்களை வழிபாடு புரியும் போழ்து அந்த தீர்த்தங்கரர்களின் புகழ்பாடும் ஸ்தோத்திரங்களையும் இயற்றும் மரபு ஜைனர்களிடம் இருந்துள்ளது. இத்தகைய ஸ்தோத்திரங்கள் பலவுண்டு. பாஹுபலிநாதாஷ்டகம் (बाहुबलिनाथाष्टकम्) சந்த்ரநாதாஷ்டகம் (चन्द्रनाथाष्टकम्) பார்ச்வநாதாஷ்டகம் (पार्श्वनाथाष्टकम्) சமந்தபத்ர ஸ்தோத்ரம் (समन्तभद्रस्तोत्रम्) ஆகியவற்றை உதாரணமாகக் கூறலாம்.

ஆகவே, ஜைன சமயத்தைச் சார்ந்த ஸம்ஸ்கிருதப் புலவர்கள் சாஸ்திரங்கள் தொடங்கி சிறுசிறு ஸ்தோத்திரங்கள் வரை பல்வேறு நூல்களை இயற்றி ஸம்ஸ்கிருத மொழியின் வளர்ச்சிக்கும் ஜைன மதத்தின் வளர்ச்சிக்கும் சிறப்பாகப் பணியாற்றியுள்ளனர் எனில் மிகையில்லை.

## தென்னிந்தியாவில் சமணம்

மஹாவீரர் ஜைன சமயத்தை வடஇந்தியா முழுதும் பரப்பியதால் ஜைன சமயம் வடஇந்தியா முழுதும் பரவியது. சந்திரகுப்த மௌரியரின் ஆட்சி காலத்தில் (கி. பி. 3, 4) வட இந்தியாவில் பஞ்சம் ஏற்பட்டது. சந்திரகுப்தர் ஜைன சமயத்தைச் சார்ந்தவராதலால், சந்திரகுப்தரின் குருவான "பத்ரபாஹு" என்பவருடன் ஏராளமான ஜைனர்கள் தெற்கு நோக்கி வந்து மைசூரில் "சிரவணபெள்குள" என்னும் ஊரில் தங்கினார்கள். பின்னர், இங்கிருந்து ஜைனமதத் தலைவர்கள் தக்காணம் மற்றும் தென்னிந்தியா முழுதும் பரவி ஜைன மதத்தைப் பரப்பினார்கள். இவர்களில் "பத்மநந்தி" என்பவர் துறவுபூண்டு "குந்தகுந்தம்" என்ற குன்றில் வாழ்ந்து வந்தார். இவர் முன் கூறிய பத்ரபாஹு என்பவரின் சீடராவார். ஸம்ஸ்கிருத மொழியில் புலமை மிக்கவர். இவர் குந்தகுந்தம் என்ற குன்றிலேயே வாழ்ந்து வந்தமையால் "குந்தகுந்தாச்சாரியார்" என்றே அழைக்கப்பட்டார். இவருக்கு ஏலாச்சாரியார், க்ருத்ரபிச்ச (Grdhrapiccha) வக்ரக்ரீவர் என்ற வேறு பெயர்களும் உண்டு. இவரே த்ராவிட தேசத்தில் (தென்னிந்தியாவில்) ஜைன சங்கம் தோற்றுவித்த மூலபுருஷராகக் கருதப்படுகிறார். குந்தகுந்தாச்சாரியார் ஸம்ஸ்க்ருத மொழியில் 84 நூல்கள் இயற்றியுள்ளதாகவும், சில நூல்கள் மட்டுமே தற்போது கிடைப்பதாகவும் ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். (இவர்மீது இயற்றப்பட்ட "குந்தநாதாஷ்டகம்" என்ற பெயரில் ஒரு ஸ்தோத்திரச்சுவடி சரஸ்வதி மஹால் நூலகத்தில் S. No. 37 உள்ளது.)

தக்காணம் முழுவதும் பரவிய ஜைன சமயத்திற்கு, ஆட்சி புரிந்த மன்னர்கள் ஆதரவளித்தனர். இவர்களில் கங்கர், கதம்பர், சாளுக்கியர், ராஷ்டிரகூடர் ஆகிய மன்னர் பரம்பரையினர் குறிப்பிடத்தக்கவர்கள், தமிழ்நாட்டில் பல்லவர்களும், சோழ, சேர, பாண்டிய மன்னர்களும் இம்மதத்திற்கு ஆதரவளித்தனர். பல்லவ மன்னன் மகேந்திர பல்லவன் சமண சமயத்தைச் சார்ந்து பின்னர் சைவத்திற்கு மாறியவன் என்பது அனைவரும் அறிந்ததே. இவன் சமணத்தைச் சார்ந்திருந்தமையால் அவனது ஆட்சிக் காலத்தில் தமிழகத்தில் சமணம் மேலோங்கியிருந்தது. பல்லவர்களின் ஆட்சிக்குப் பின்னர் சோழர்களும் சமண மதத்திற்கு ஆதரவளித்துள்ளனர்.

கண்டராதித்த சோழரால் ஆதரவுபெற்ற "கண்டராதித்தப் பெரும் பள்ளி", சுந்தரசோழரின் ஆதரவுபெற்ற "சுந்தரசோழப் பெரும்பள்ளி", குலோத்துங்கனால் அளிக்கப்பெற்ற கொடையால் கூகூரில் இருந்த "குலோத்துங்கப் பெரும்பள்ளி". குந்தவை ஜினாலயம் போன்ற ஜைனர்களின் வாழ்விடம் பற்றிய செய்திகள் அறியமுடிகிறது.

முதலாம் ராஜராஜன் காலத்தில் எடுப்பித்த தஞ்சைப் பெருவுடையார் கோவில் விமானத்தின் தென்புறச் சுவரில் உள்ள கல்வெட்டின்படி குடவாயிலுடன் இணைந்துள்ள கிராமங்களான ஆரப்பாழ் சீரன்தேவன்குடி, பாளையூர் போன்ற ஊர்களிலிருந்த பள்ளிகள் பற்றியும், அப்பள்ளிகளுக்குரிய பள்ளிச் சந்த நிலங்கள் நீக்கியும், மற்ற நில வருவாயைத் தஞ்சைப் பெருவுடையார் கோவிலுக்கு அளிக்கவேண்டும் என்னும் செய்திகள் காணப்படுவதாகக் குடவாயில் M. பாலசுப்ரமண்யம் "குடவாயிற்கோட்டம்" என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். எனவே சோழ மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் சோழ நாட்டில் சமணம் தழைத்தோங்கியிருந்தது என்பது தெளிவு.

இதைப்போலவே பாண்டிய நாட்டிலும், சேர நாட்டிலும் சமணம் தழைத்தோங்கி இருந்துள்ளது. பின்னர், சைவ சமய குருமார்களான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் சைவ சமயத்தின் பெருமையைக் கூறியும், தலங்கள்தோறும் சென்று தேவாரப் பாடல்களைப் பாடியும் சைவ சமயத்தை மேலோங்கச் செய்தனர். அனல்வாதம், புனல்வாதம் கல்லைத் தெப்பமாகச் செய்தது போன்றவைற்றால் சைவ சமயம் மேலோங்கி சமணம் வலுவிழந்தது.

சமண சமயத்தைப் பின்பற்றுகின்றவர்களின் எண்ணிக்கை நாளடைவில் குறைந்தது. ஆனால் சமணர்களின் கொள்கைகளான கொல்லாமை, புலால் உண்ணாமை முதலிய பழக்கங்கள் தமிழகத்தில் வேரூன்றிவிட்டன.

இன்றளவும், ஜைனர்களின் எண்ணிக்கை குறைந்த அளவிலேயே இருந்துவருகிறது. வட ஆற்காடு, தென் ஆற்காடு, செங்கல்பட்டு, தஞ்சாவூர், மைசூர், தென் கன்னடம் முதலிய இடங்களில் இன்றும் ஜைன மதத்தினர் வாழ்ந்து வருகின்றனர்.

**சரஸ்வதி மஹாலிலுள்ள ஜைனமதச் சுவடிகள் :**

தஞ்சை சரஸ்வதி மஹால் நூலகத்தின் ஸம்ஸ்கிருதப் பிரிவில் காணப்படும் சுவடிகளின் அகரவரிசைப் பட்டியல் தற்போது முதன்முதலாக வெளிவருகிறது.

இரண்டாம் சரபோஜி மன்னரின் காலத்திலோ, அதற்கு முன்போ இந்நூலகத்தில் ஜைன மதச் சுவடிகளில் இரண்டு சுவடிகள் மட்டுமே பாதுகாக்கப்பெற்றுள்ளன. 8–1–1921 ஆம் ஆண்டு J. L. தொகுதி என்று அழைக்கப்படும் ஜம்புநாத பட்லாண்டசே என்பவரால் தொகுக்கப்பட்ட சுவடிகள் அன்பளிப்பாக இந்நூலகத்திற்கு வந்து, தனித் தொகுதியாக வைத்துப் பாதுகாக்கப்படுகிறது. (J. L. Colection) இச் சுவடித் தொகுப்பிலுள்ள சுவடிகளில் 3 தலைப்புக்கள் ஜைன சமயத் தொடர்புடைய சுவடிகளாகும். ஆக 5 சுவடிகளைப் பற்றிய குறிப்புக்களுடன் 1932 ஆம் ஆண்டில் வெளிவந்த சுவடி விவரப் பட்டியலில்(Descriptive Catalogue Vol. XIVல்) எண். 8239 முதல் 8243 வரையுள்ள எண்களில் விளக்கமாக அறியலாம். இவை அனைத்துமே காகிதச் சுவடிகளாகும்.

1973, 74 ஆம் ஆண்டுகளில் இந்நூலகத்தில் ஸம்ஸ்க்ருத பண்டிதர்களாகப் பணியாற்றிய திரு N. K ராமானுஜ தாத்தாசாரியார் அவர்களும், திரு K. E. கோவிந்தன் அவர்களும் அரிதின் முயன்று ஜைன மதத் தொடர்புடைய ஓலைச் சுவடிகளை இந்நூலகத்தில் சேர்த்துள்ளனர். இச் சுவடிக் கட்டுகளில் பல்வேறு தலைப்புக்குரிய நூல்களும், ஸ்தோத்திரங்களும் புராணங்களும் காணப்படுகின்றன. இச்சுவடிகள் ' திருச்சேறை, நெல்லியாங்குளம், சாத்தமங்கலம், கீழ்ச்சாத்தமங்கலம், இளங்காடு, திருவாய்ப்பாடி, பொன்னூர், முகலூர் ஆகிய ஊர்களிலிருந்து பெறப்பட்டவை.

இச்சுவடிகளைப் பரிசீலிக்கும்போது 297 தலைப்புக்களில் நூல்கள் காணப்படுகின்றன. இச்சுவடிகளில் காணப்பெறும் நூல்களை இயற்றிய ஆசிரியர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் :— தன்யஸூரி, ஸ்நேஹாசார்யர்,

மானதுங்காச்சாரியார். வாதிராஜஸூரி. பட்டிதீக்ஷித தேவதத்த. வாதீப ஸிம்ஹர், ஆசாதரஸூரி, மல்லிஷேதேவர். ஸமந்தபத்ரஸ்வாமி, அகலங்கபட்டர், ஸித்ததேவ திவாகரர் (वन्यसूरी. ग्रसेनाचार्यः. मानतुङ्गाचार्यः, वादिराजसूरी, भट्टीदीक्षितदेवदत्तः, वादीमसिह्मः. आशाधरसूरी, मल्लिषदेवः, समन्तभद्रस्वामि. अकलङ्कभट्टः, सिद्धदेवदिवाकरः) போன்ற ஆசிரியர்களைக் குறிப்பிடலாம். இத்தொகுப்புக்களில் குறிப்பிடத்தக்க வேறுபல ஆசிரியர்களின் நூல்களும் இடம்பெற்றுள்ளன.

கி. பி. 3. 4-ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்தவரான ஸமந்தபத்ரர் இயற்றியுள்ள நூல்களில் ஸ்வயம்பூ ஸ்தோத்ரம், ரத்னகரண்டகம் (स्वयम्भूस्तोत्रम् , रत्नकरण्डकम्). கி. பி. 5-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஸித்ததேவ திவாகரர் இயற்றிய கல்யாணமந்த்ர ஸ்தோத்ரம், கி. பி. 8-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அகளங்கபட்டரின் தத்வார்த்தஸூத்ரம். அகளங்க ஸ்தோத்ரம் ஆகிய நூல்கள் இத்தொகுதிகளில் காணப்படுகின்றன.

வேறு எந்த நூலகத்திலும் காணப்படாத பல ஸ்தோத்திரங்கள் இத்தொகுதிகளில் காணப்படுவதும் சிறப்புக்குறியது. கி. பி. முதலாம் நூற்றாண்டில் வாழ்ந்தவரான குந்தகுந்தாச்சாரியார் பெயரில் இயற்றப் பெற்ற குந்தகுந்தாஷ்டகம் போன்ற ஸ்தோத்திரங்களும், பல்வேறு பெயர்களில் காணப்படும் வேறுபல ஸ்தோத்திரங்களும் இத்தொகுதியில் காணலாம். இவற்றில் ஒருசில நூல்களுக்கு தமிழுரைகளும் ஸம்ஸ்கிருத உரைநூல்களும் காணப்படுகின்றன.

ஜைன சமயத் தொடர்புடைய இந்தச் சுவடிகளின் அகர வரிசைப் பட்டியல் தனி நூலாக வெளிவருவது ஜைன சமயம் பற்றி ஆராயும் ஆய்வாளர்களுக்கு உதவியாக இருக்கும் என்று நம்புகிறேன்.

ந. ஸ்ரீனிவாஸன்,
(ஸம்ஸ்கிருத பண்டிதர்)
ஸரஸ்வதி மஹால் நூலகம்.

| Sl. No. | Title (Devanagari) | Title (Roman) | Author |
|---|---|---|---|
| 1 | अकलङ्कस्तोत्रम्[1] | Akalanka Stotram | |
| 2 | अकलङ्काष्टकव्याख्या | Akalankashtaka Vyakhya | |
| 3 | अनन्तनाथाष्टकम् | Anantanathastakam | |
| 4 | अपराजितमन्त्रः | Aparajita Mantrah | |
| 5 | अर्हपरमेश्वरार्चनाविधानम् | Arhaparamesvara Archana Vidanam | |
| 6 | अर्हस्तोत्रव्याख्या | Arhastotra Vyakhya | |
| 7 | अष्टोत्तरशतसहस्रनामस्तोत्रम् | Astotrasata Sahasra-nama Stotram | |
| 8 | ,, | ,, | |
| 9 | ,, | ,, | |
| 10 | ,, | ,, | Jinasenacarya |
| 11 | अष्टोत्तरशतसहस्रनामम् | Astotrasata Sahasranamam | Snasenacarya |
| 12 | आचार्यभक्तिः | Acharya Bhaktihi | |
| 13 | ,, | ,, | |
| 14 | ,, | ,, | |
| 15 | आचार्यविधानम् | Aacharya Vidhanam | |

1. The stotra also called Akalankastaka. The information in M.D. 9424 that this a stotra in praise of Akalanka himself, the logician, and that in India Office Library, and 7600 that is on Siva are both wrong. The stotra is on Arhan who is said to

| Subject | Complete or Incomlete | Script | Condition | Greem No. | Leaves |
|---|---|---|---|---|---|
| Stotram | Complete | Grantha | Fairly good | 870 | 6 |
| ,, Comen | ,, | ,, | V. Decaying | 879 | 15 |
| Stotram | ,, | ,, | Fairly good | 883 | 1 |
| Mantra | ,, | ,, | ,, | 911 | 1 |
| Kalpa | ,, | ,, | Decaying | 931 | 14 |
| Stotra | ,, | G. & Ta | Fair | 920 | 12 |
| ,, | ,, | G | Good | 952 | 15 |
| ,, | ,, | ,, | ,, | 874 | 8 |
| ,, | ,, | ,, | Fair | 890 | 8 |
| ,, | ,, | ,, | ,, | 888 | 8 |
| Kalpa | ,, | ,, | Decaying | 874 | 8 |
| Stotra | ,, | ,, | Fair | 871 | 4 |
| ,, | ,, | ,, | ,, | 883 | 4 |
| ,, | ,, | ,, | ,, | 1593 | 3 |
| ,, | ,, | ,, | Good | 901 | 1 |

be the real Siva (Mangala). the real Vishnu (Vyapaka) and so on. There are a Siva stotra and on Akalanka stotra, is also wrong. (Refer N. C. C. Vol. I).

